தில்நெற்றிமீதுகுத்திவாங்கியரக்தமும், சூலத்திற் கோர்த்து வாங்கிய ரக்தமும், ஒவ்வொரு விஷ்ணுவாகக் கசக்கிப் பிழிய வுண்டாகிய ரக்தமும் பிடித்து வைக்கும் பாத்திரமாத்திர மாகவேயன்றோ மேலோர்கொள்கின்றனர்? (நூறுகோடிபிரமர்கணொந்தினா, ராறுகோடி நாராயணர்ங்களே, யேறுகங்கைமணலெண்ணிலிந்திரர், ஈறிலாதவனீசனொருவனே) என்னுந்திருவாக் குண்மையால் கண்டுணர்க. (வேதியனறுகையொடுமாலவன்மிகுதியும்) என்றபடியுங்கண்டாலன்றோ பிரமவிஷ்ணுக்கள் மாங்ஷியம்வெளிப்படும்? "எண்ணிலி யிந்திரரெத்தனையோ பிரமர்களு, மண்மிசைமால்பலர் மாண்டனர்காண்" என்றபடி யாலுங்காண்க.

இவற்றை யுணருமறிவில்லாத படுபாவியார் மேல சிவவாக்கியத்தைப் பாழாக்கவந்தபடி அவர் மதத்தை யாமுஞ் செய்யவலியற்றோமா? எம்மதச்சாரபேயன்றி யினமாகக்கங்களுக்குமே யன்றோ வதனை யநுவயிக்கவல்லேம்? சிவனார்க்குவந்த ஹத்தியைத் தனது ரக்த பிக்ஷையால் விஷ்ணுமாற்றினானெனவும், அது ஏசு வென்பவர் தனது ரக்தத்தா லுயிர்கள் பாவத்தைப் போக்கினாரென்பதற கொக்குமெனவும், ஏசுவுக்குக் கிறிஸ்து வென்னும்பேரிருப்பதுவே கிருஷ்ணனைக் காட்டுமெனவும், அவரைச் சார்ந்தவப்போஸ்தலர் பன்னிருவருளரென்பதே பன்னிரண்டாழ்வார்களைக் காட்டுமெனவும், அவ்வேசுமதத்தில் மோக்ஷவீட்டுக்குச் சுண்ணாம்புக்கல் முதலியன கொண்டு ஏறிப்போகப் படிகட்டி வருகையிற் றடையுண்டுபோயிற்றெனக் கூறியுள்ளதே பாஞ்சராத்திரப் பிரவிஷ்டர் தம்முளு மப்படி நிகழ்ந்ததாகக் கூறு மாங்ஷியங் காட்டுமெனவுஞ் சமர்த்திப்பதேயாம். இதனால், ஒருமதமே யன்றோ பாஞ்சராத்திரம, கிறிஸ்து மார்க்க மென்னும் பரியாயநாமங்களால் வர்த்திப்பதாகக்கொள்ள விடந்தருகின்றது? இவ்விரு மதங்களையு

மொற்றுமை செய்யவேண்டுமென்று மெண்ண மெமக்கில்லாமையா லிவ்வளவில் விடுத்தனம்.

மேலுண்மையால் (மண்டையேந்துகையனை) என்று சிவவாக்கியர் கூறிய தன்மை வெளிப்பட்டது. மண்டைபிரமனதும், அதிலுள்ள இரக்தம் விஷ்ணுவினது மாதலையா லவ்விருவருககும் பரனுனதன்மை சிவனிடம் சித்தித்தது. இதனுல் சிவனருள்பெற்ற மேலோரைப் பிரமவிஷ்ணுக்கள் வணங்குதல செய்வாரென்பது தோன்றவே (பண்டைமாலயனருெழுப்பணிந்துவாழுலாருமே) என விதந்தனராகப்பரமபண்டிதராயுள்ளபெரியோர்பொருள் விரிப்பர். இந்தவியவஸ்தாவிசாரத்தால் மேலபார்த்தரு செய்யத்தலை நீட்டிய தாதனுரைதடுமாறியது காண்க.

இங்ஙனநிற்க, மேலபசவ்யார்த்தத்தையே யவலம்பித்து வேதபாருயணுகிய சடகோபனுங் தனது தப்புரையில (பேசநினறசிவனுக்கும் பிரமனறனக்கும்பிறர்க்கும், நாயகனவனே கபாலாநன்மோக்கத்துக்கணடுகொண்மின்) எனக் கூறியுள்ளாறுகையால, யாமிதுவரை செயதுவந்த வுபநியாசத்தைத் தரிசித்தபோக்கதுவுந் துசசமாகவே கழிந்தலமைதிபெறுமென்க. கபாலநன்மோக்கம் என்றபடிப் பிரமகபாலம் சிவனுர்கையில்அபாவத்தையடையவேண்டியதாக வப்படிக்கின்றி யவருடையவுபாங்கங்களிலொன்றாகச சாசுவிதநிலையினதாக வவர்திருக்கரத்திலெஞ்ஞான்றுமமைதல் சுருதிநிஷ்டமெனினப் பேயுரைக்குபஜீவனமெங்கேயுண்டாம்? தோஷமாக வந்திருப்பினன்றோ தந்நிவிர்த்திக்கிடம்பெறும்? பிரம்ஹவிஷ்ணுவாதி சேதனகோடிகள் கர்வாபஹாரங்காரணமாகத் தாங்கியிருத்தலா லதற்கபவ மோர்போது முண்டாகாதென்க. கபாலம் சிவனுர்கையி னீங்கியதுண்டெனினவரைக் கபாலபாணியென்று நூல்கள் முறையிடுவதெற்றுக்கு? முன்னர்ப்பற்றியிருந்த சம்பந்தத்தாலெனின்,

அப்படியேயன்றோ பிரமனிடமு முன்சம்பந்தத்தால் ஐம்முகன் என்னு நாமம் பாராட்டல்வேண்டும்? நான்முகன், சதுர்முகனித்யாதி நாமங்களன்றி யங்ஙனாவழங்க ஹேதுவில்லாதபோது, சிவனரிடமாத்திரம்பூர்வஸ்திதியை நோக்கலாயிற்றென்ப தென்னபேதமை? இதனால் சிவனார்க்கு ஹத்தியால் பிரம்ஹகபாலசம்பந்த மூண்டாகாமையால் தேவதாந்தர நிக்ரஹாநுக்ரஹத்வ சாமர்த்திய சீலத்தைக்காட்டு முபாங்கமாகச சிவனாரதனைத் தரித்திருப்பது காலத்திரயாபாத்யமாய் அபாவத்தையடையாதென்றே நிசசயிக்கப் படாமையால், அதற்கபாவமுரைத்த சடகோபன்முகத்தில சாணம் விழுந்த தென்க.

இனி, அந்தியஜன்குருக்களில் சிரேஷ்டனாகிய குருரனென்றுவழங்கிவருங் குருட்டுத்தாதனொருவன் இருந்தவிடந் தெரியாமல காஷாயதண்டவிசாஜனனாயோடியொளித்த தனதுபரமார்த்த குருவைசசோழமகாராஜன் பயத்தினின்றுங் காப்பாறறுமபொருட்டு அவனைப போல் தான் வேஷம்போட்டுக்கொண்டுவந்து அரசனால் கண்தோண்டப்பபட்டு அவமானமெய்திய காலையில் "ஶிவாத்பரதரம்நாஸ்தி" என்று அரசர்கோமான் கையொப்பம் வைக்கசசொல்லிக் கேட்டதற்கு ( த்ரோணமஸ்தி தத꞉ பரம் ) எனவக்குரூரன் பதிலாக விபரீதஞ்செய்தானாகத் தாமுங் கூறிக்கொண்டு வருமவ்வுண்மையையு நோககாமல் மேலே (மண்டையேந்துமையனை) என்பதற்குப் பொருள் விரித்ததுபோல் ( ஶிவாத்பரதரம்நாஸ்தி ) என்பதற்கும் அக்கோளகப்புலையர் செய்த வியாக்யானத்தையீண்டுச் சற்றுவிரிப்பாம்.—மேல்வாக்கியத்தில் (பரதரசப்தத்திலே தரப்பாலேசிவனுக்கு மேற்பட்டவனுக்கு மேற்பட்டவனைச் சொல்லுகையாலே) என்றுகூறி (இவ்வளவிலே சிவபரத்வம் சித்திக்க மாட்டாதல்லவா?) என்று சந்தோஷித்தனர்.—இதைப் பரி

யாலோசிக்கில் அம்மூதேவிமகனார் தன்மையே பிரகாச மாயிற்று. (சிவாத்பரதரம்) என்பதில் சிவனுக்குப் பர மாயுள்ளதற்குப் பரமென்று இப்பெரும்புலையர் பொ ருள்கொண்டபடியே யிவர்கள் குருராஜுங்கொண்டிருப் பனாகில் சிவம்=குறுணியெனவும், சிவாத்பரதரம்=கு றுணிக்கு மேலானபதக்கெனவும் பொருளுண்டாக (து ரோணமேஸ்தித்த:பரம்) என வேறுவாக்கியமொன்றை யவனெழுதநேரிட்டதென்னை? துரோணத்துக்கு மேலி ட்ட (முக்குறுணிபரம்) என்னும் பொருளுண்டாகவன் றோ வவனெழுதல்வேண்டும்? அங்ஙனமெழுதாமையா ல் குருராஜும் சோழமகாராஜனைப்போல் தவறினனெ ன்றேயன்றோ சொல்லவரும்? தங்கள்குருராஜனைவிட்டு அரசர்கோமானைமாத்திரம் பாழ்வாய்திறந்து பழியுரை த்தவப்பதடியையென்னசெய்யலாம்? அவன் சித்தாந் தப்படிசிவஸ்தானத்தில் குறுணியளவையானபடியே, பிரமனது ஸ்தானத்தில பதக்கும், விஷ்ணுஸ்தானத்தில் முக்குறுணியு மளவைகளாகவேண்டியபடியால். "சிவா த்பரதரம்" என்ற மேலிடத்தில் பரத்துக்குமேலிட்ட பரம் என்று விபரீதப்பொருள்கொண்ட வவ்விழுதை யார் பின்வாக்கியங்களைச் சற்றேயூகிப்பாராக. (శివాత్పరతరం) என்று சுருதியிலும், "నాస్యాదేవమహంమన్యే రుద్రాత్పరతరంమహత్" என்று மங்கணிகர் வசனமாகப் பாரதத் திலும், "భూతంపరతరంమత్తో నాస్తి" என்று பிரம்ஹ தேவர் வசனமாக ஷை பாரதத்திலும் பெறப்பட்டவாக் கியங்களிற் போந்த பரதரசப்தங்களுக் கென்ன விபரீத ப்பொருள் சொல்லித் தலைகீட்டுவாரோ அறியேம். மே ல்வாக்கியங்களுக்கு முன்னமேதானே வியாக்கியாதாக் களேற்பட்டுப் பொருள்விரித்துள்ளாராகையா லவற் றோடு முரணி யவ்வந்தியஜமதப்பிரஷ்டர் கோடுகோ டெனப் புலம்புவாரொலி னதைப்பெரும் பிதற்றெனக்

கழிப்பதன்றி யாரோ சம்மானிப்பவர்? இன்னும் விரிக்கிற் பெருகும்.

இனி, "మృగోనభీమఃకుచరోగిరిష్ఠాయస్యోరుషు త్రిషు విక్రమణేషు" என்னும்வசனமொன்றைக்கீட்டி யாதொருநாராயணனுடைய மகாவைபவ சாலிகளுமாய் மூன்றுபடிப்பட்டதுகளுமா யிருந்துள்ள அளக்கிறவியாபாரங்களிலேபீமசப்தவாச்யனைப் பயங்கரனைருத்ரனைவன்மான்குட்டியோடொத்தவனைக ஹிமவத்பர்வதத்திலே முடங்கிக்கிடந்தானென்று வியாக்கியானஞ்செய்துபுலம்பினர். மேல்வசனத்தில் பதம்பிரித்துரைக்கவந்த வப்பண்டிதக்கழுதையாவார்ஹிமவத்பர்வதத்திலென்றுபொருள்கூறியதற்கு அங்கேயிடங்கொடுத்தபதமேது?(ம்ருகோன) என்பது மான்குட்டியோ டொத்தவனைக வென்று எப்படிப்பொருள்தரும்? பீமசப்தம் ருத்ரபரமாகப் பிரகிருதத்தில் விநியோகந்தேடியதும், சரிஷ்டா, குசரஃ என்னுஞ் சப்தங்களுக்குப் பொருள்கூறியதுந் தலையெடுக்காது! எடுக்காது!! எங்ஙனமெனின், மேல்வசனம் "మృగోనభీమఃకుచరోగిరిష్ఠాయస్యోరుషు త్రిషువిక్రమణేషు" என்று வெளிப்பட்டு யாதொருவருடைய பெரியனவாகியமூன்றளவுகளுமியங்கும் போது, பீமஃ=பயங்கர முடையனவும், குசரஃ=குமார்க்கத்தில் சஞ்சாரஞ்செய்வனவுமாகிய, ம்ருகஃ = ஸிம்ஹவ்யாக்ராதிகள், நசயிஷ்டா = சயனித்துநித்திரை செய்யவில்லையோ, (அவருடைய) క్షితః = இரண்டு அடிகளையுமறிவோமென்றுமூன்வாக்கியத்தில் சேரக்கடவது. இப்படிப்பொருளுரைப்பதைவிட்டுச்சிவலிங்கையே தவமாய்க்கொண்டு அப்படுபாவியார்குணர்த்த பாழுரைபறந்தது! பறந்தது!! அக்குண்டக்சேயுதகரித்தபடியு மந்தவசனத்தில் சரிஷ்டா — ஹிமவத்பர்வதத்திலே முடங்கிக்கிடந்தா னென்றுபொருள்கூறுவதற்குப் பதமேயில்லை.அவரோ கரிஷ்டாவென

ப்பாடமோதித் தமதுபாமரத்தை விளக்குமாறுயினரா கையால். இதையிவ்வளவில் விடுத்தாம்.

இதுநிற்க, ஹரதத்தாசாரிய சுவாமிகள் அனற்பதமாயிருந்தவிருப்புப்படியேறிச சிவபாரமயத்தைநாட்டி வெளிப்படுத்திய சுலோகங்களுக் குள்ளபடியே அந்த மகிமையுண்டெனி னிக்காலத்திலு மவைகளைக்கொண் டொருவன் சிவபாரம்யத்தை முற்படியே யேன்செய்யககூடாதென்று விசித்திரம்பேசினா. இவர் ஐயறிவோடுகூடிய மானிடர்ராயினிப்படிபபிதற்ற மாட்டார். இவர்களிலோர் பேயாழ்வான்கிழியறுத்துக் கிழியுண்டகதையைமறந்தனர்போலும். அவ்வந்தராயன்பாட்டைபபாடியெந்தக்கொசவனைவது தங்கள்விஷ்ணுபாரம்யத்தையேனதாபித்துக் கொளளக்கூடாது? மல்லாந்துமிழ்ந்தான் மார்மேல விழுமென்றறியாத வம்மடைய சிரோமணியார்க்கதுசெய்தல் தமமால் கூடாதெனக்காட்டியபடியே யாமுனு சொல்லகில்லேம். எம்மபெருநிதிகளாய்விளங்கும் ஹரதத்தரமுதவாக்குக் கன்றுமின்றுமேயன்றியென்றுமவ்வாற்றலுண்டெனவும், அவ்வண்ணமேயாவசிகம்வரப்பெறுங்கால் நடத்தவல்ல பெரியோரிக்காலத்திலுமுண்டெனவுந் துணிந்து கூறுவோமாக.

இவ்வுண்மையறியாதுமுழுதுங்குலைக்கத்தொடங்கியவஞ்ஞமலிப்பிறவியார் அத்துஷ்டவாசகத்தின் முகவுரையில்சிலவிசித்திரம்பகர்ந்ததையுமீண்டுவிசாரிப்பாம். தக்ஷிணாமூர்த்தியென்னுஞ்சிவனையும், சரஸ்வதியையும், வால்மீகர்முதலினோரையுந்தம்முடைய சக்திசாகரசீகாத்தாலேயிடுக்கிக்கொண்டமாஹாத்மியம்தங்கள்குதிரைமூஞ்சியாகிய ஹயக்ரீவரிட முண்டெனக் கொண்டாடி மகிழ்ந்தனர். சகலபிரமாணங்களுக்குள் சிரேஷ்டதமங்களான சர்வோபநிஷத் பிரதிபாத்யராயுள்ள பரசிவப்பிரபுவின் மஹிமார்ணவங்களை யறிந்தானந்திக்கும் பாக்

கியசாலிகளல்லாத பாஷண்டஷண்டாள் துக்கிதாளாய்ப் பரமேசுவரநிந்தையிற் படிந்தே யுழல்வர்! உழல்வர்!! ஈசாவாஸ்யமுதல் முக்திகோப நிஷத்திருக நூற்றெட்டுப நிஷத்துக்கள் வேதாந்தமெனப்பிரதயக்ஷீகரிக்கிருககுமவற்றுள் ஈசாவாஸ்ய மென்னு முபநிஷத்பிரதமத்தினுபக்கிரமத்தில் "ఈశావాస్యమిదం సర్వం యత్కించ జగత్యాం జగత్" என்றுந்தொடக்கத்தில் ஈசசப்த மிருப்பதாலும், முக்திகோப நிஷத்தென்னு முபஸம்ஹாரோபநிஷத்தில் "చతుర్విధాచ యా ముక్తి ర్మదుపాసనయా భవేత్। కైవల్య ముక్తి రేకైవ పారమార్థికరూపిణీ" என்னும் ஸ்ரீராமவசனத்தில் கைவல்யசப்தம் வெளிப்பட்டு "నసన్నచాసచ్ఛివ ఏవ కేవలః" என்னுஞ்சுருதியை யநுசரித்துக கேவலசபத சிவசபதஸாமாநாதிகரண்யம் பெறப்படுவதாலு முபகரமோபஸம்ஹாரங்களால் சகலோபநிஷத்துக்களுக்குஞ்சிவபரத்வ சித்தியேபிராப்தமாயிற்று. இவற்றின்மத்தியில ஸ்ரீதக்ஷிணாமூர்த்திபரமும், ஹயக்ரீவபரமுமாகப பெறபபட்ட வுபநிஷத்துக்க ளிரண்டில் தக்ஷிணாமூர்த்யுபநிஷத்தில "సురగురుం ధ్యాయామ్యభీష్టాప్తయే" என்னும்வசனத்தில் குருசப்தம் பிரகாசிக்கின்றது. ஹயக்ரீவோப நிஷத்தினாதிமத்யாவஸானங்களில் தேடித்தேடிப் பார்த்துங்குருசப்தமாவது, அதன்பரியாய சபதமாவது காணக்கிடைத்தாயிற்று. இங்ஙனமாக, "గుకారోంధకారస్స్య రుకారస్తేజ ఉచ్యతే" என்றபடி குகாரமொழிந்த குகாராந்தகார ஸ்வரூபியாகிய ஹயக்ரீவர்பால் ததஜ்ஞானாந்தகார த்வம்ஸகராகிய ருகாரஸ்தேஜஸ்வரூபராகும் ஸ்ரீதக்ஷிணாமூர்த்திக்குவியாப்பியங்கூறியது அவைகதிகபோத மென்றே நிரோதஞ்செய்யப்பட்டது.

இதுநிற்க,பாசுபதம்வாமபாசுபதம்,தக்ஷிணபாசுபதம்எனவிரண்டாகப்பிரிந்ததையேயன்றோ"ద్విపథగాను గామినః శైవ"என்றதில்கேசனசப்தங்காட்டுகின்றது? அதி

ல்தக்ஷிணபாசுபதமேயன்றோ சாம்பவாக்ரேசர்களாலா தரிக்கப்பட்டுச் சைவாசாரமென்னும் பிரசித்தியடைந்தி ருக்கின்றது? இதுகேவலம்வைதிகமென்னுமுண்மை பாசுபதோபநிஷத்தென்னு மோருபநிஷத்துக் காண்டலே காட்டும். பாசுபதத்துக்குண்டாயிருக்கிறபடியே பாஞ்ச ராத்திரத்துக்கென்றோருபநிஷத்துமுண்டானதில்லையாக் அவைதிகநிஷ்டமாகிய வப்பாஞ்சராத்திராவலம்பகர் வைதிகமாகிய பாசுபதத்தை மேல, "ప్రమథగణానుగాశినః ద్విజః" என்றசாமானிய வசனத்தால் நிந்தைகூறத்தொடங் கியது பதிவ்ரதாசிரோமணியை விபசாரியாயுள்ளவள் பழித்துமகிழ்வதுபோலவேயாம். இவ்வுண்மையறியாது பாசுபதம் வேதபாஹ்யம் என்று கரகோஷஞ்செய்வார து அகந்தையை யாமென்னென்று வியப்பது? உபநிஷத்து களின் மத்தியில் பெறப்பட்ட பாசுபதம் அவைதிகமு ம், அங்கே பெறப்படாத பாஞ்சராத்திரம் வைதிகமுமா வது கலிகாலப்பண்பாம். இனி விவரியாதாலும் வைதிக மாகவிரும்போதும், இப்படி வரம்பிகந்துவாய்வம்பாடு மந்தபரம்பரையார்க்கு எத்தனைகோடி நியாயங்காட்டி னுமேறாது! ஏறாது!! இதனால, வைதிகராகிய பாசுபதர் களிடத்தில பாஷண்டராயுள்ள பாஞ்சராத்திரிகள் நூற றுக்குநூஷணம நிஷ்புருஹமென்க.

இன்னும், "దీక్షితాః పాంచరాత్రేషు భవంతి బ్రాహ్మణాధమాః" என்றுமகுடசம்ஹிதாவசனத்தால் பாஞ்சராத்திரிகளே கௌதமசாபத்துக்குள்ளானதைமறைத்துப் பாசுபதர்க் கேயதுவந்தது என்றுரைத்தமூடர்களைப் பிரமாண மென்னுந்தடிகொண்டு மண்டையிளக்கவடிப்பதேயுக்த ம்! யுக்தம்!! இப்படியேயின்னும், வேதத்திலில்லாத "దేవేన దైత్యప్రమథనరుచినా" என்றும், "శైవాద్యాఖ్యాః శైవైః" என்றுஞ் சில பொய்யுரைகளையும், வைதிகஹீனனாகிய வேதாந்த தேசிகன் என்னுந்திருட்டுப் பெயர்த்தாதனும், அவை

திகசிலனுகிய அக்கியஜாரியனுங் கூறியுள்ள சிலதப்பு வசனங்களையுமே யாதாரவாய்க்கொண்டு பாசுபதபஙகஞ் செய்யவந்தவப்பஞ்சமச்சிரேஷ்ட னெண்ணமெப்படி முன்னுக்குவரும்? மேலெடுத்துக்காட்டியபவநாசாரிய னென்னுங் காட்டெருமைகள் வீழ்ந்துகலக்கிய சர்வஜ்ஞோபயுக்தமான பிரமாண மென்னுந் தடாகஜலத்தைத்தெளிவித்துவழங்கவந்த தேசிகாரதநமாய் விளங்கும் அப்பதீக்ஷிதஸ்வாமிகளை யோர்தேவதாசியானவள் பரிபவப்படுத்தினளென்று அப்பேதைமகனார் பின்னும்புலம்பினார். இதைவிசாரிக்கையில், தீக்ஷிதஸ்வாமிகளால்பலமுறையபஜயம்பெற்றுப் பரிபவமெய்திவந்த தாத்தாசாரியென்னுமவைதிகனனவன் தீக்ஷிதருபத்திரவத்தைப்பொறுக்கமாட்டாம லிவரிடத்தினின்று மெப்படித் தப்பித்துக்கொள்வதென்றேநாள் தன்னுடைய மனைவியோடு யோசிக்கையில், அம்மாது சிரோமணி புருஷனுக்குத்திருப்திகூறி அவரை நானஜெயித்து விடுகிறேன்பாருமென்றுமறுதினந் தாத்தாசாரியோடு தானேராஜசபைக்கு வந்தனள். அந்தமஹாசபையில் தாத்தாசாரிக்குப்பக்கவினின்றுகொண் டுபசாரஞ்செய்பவள்போலபினயித்திருந்த வப்பார்ப்பனமாது அங்கேயெழுந்தருளி யிருந்த தீக்ஷிதமூர்த்திகளுக் கெதிராகத் திரும்பிக் கொண்டு நமைமேலிட்டுச சொறிகின்ற வியாஜமூலத்தால் அவர் பார்க்கும்படித் தன்காலைத்தூக்கித் தொடைமூலத்தை யவருக்குக் காட்டினள். உடனேதீக்ஷிதர் தலைகுனிந்து நிமிர்ந்துபாராது விட்டனர். இப்படிக்குத்தலைகுனிய நேரிட்ட துண்மையே! இந்தப்பிரபாவமெல்லாந் தங்களாசாரியர், ஆசாரியஸ்ரீகள்மகிமைகளாகவே வெளிப்பட்டவதிசயமே! அதிசயம்!! இப்படியநந்தமுளவற்றை விரிப்பது அவசியமன்று.

இதுநிற்க, "ஆகாசாத்பதிதம்தோயம், யதாகச்சதிசாகரம், சர்வதேவநமஸ்காரம, கேசவம்பிரதிகச்சதி" என்னும்வசன

மொன்றெழுதி, இதை ஸ்மார்த்தர், மாத்துவர், வைஷ்ணவரென்னுந்திரிமதஸ்தருந் தினமும் அநுஷ்டானுந்தத்தில் படிக்கின்றார்களெனவும், இதுகுறுநிலமன்னர் பகுதியெல்லாஞ் சக்கிரவர்த்தியினிடத்தே யடைவது போலச் சகலலோகேசுவரர்களுக்கும் பரமேசுவரராய் விளங்கும் விஷ்ணுவினிடத்தே சகலதேவர்களுமடைய வேண்டுமென்பதனைக் காட்டுமெனவும் "மோட்சமிச்சேத ஜனார்த்தநாத்" என்றபடியறிந்த சிவத்விஜர் சந்நியசித்து ஏகதண்டந் தாங்கினவராகிச் சதாநாராயண மந்திரத்தையேயுச்சரிப்பதன்றியில் தங்களையாரேனும் வந்தனுதிவழிபாடுகள் செய்யுங்கால் நாராயணஸ்மரணையே செய்கின்றார்களெனவும், இவ்வுண்மையையறிந்துமுலகில்விஷ்ணுபாரம்யபுத்திவாராமல் சிலர்கெடுகின்றனரெனவு மவ்வழுமூஞ் சித்தாதர் அதிகமனஸ்தாபத்தையடைந்தனர். அப்பெருந்துரோகியார்க் கெப்பொழுதும் விசனப்பட வேண்டியது பூர்வாபரகர்ம பலமாகையால் யுக்தந்தான்.

மேல்சுலோகங்களில் "கேசவம்பிரதிகச்சதி" என்னுமுண்மையை யறிந்தே சத்துக்களாயுள்ள பெரியோர் சிவாராதனத்திற்பரத்துவபுத்திபண்ணிவருகின்றனர். எங்ஙனமெனின், சகலதேவர்களுக்கு மாத்மாக்கள் செய்கிற நமஸ்காரத்தைக் கேசவபதவாச்சியராகிய நாராயணர்வாங்கிச்சிவபெருமானிடஞ்சேர்ப்பிக்கின்றார் என்பதேயுண்மைக்கருத்தாம். "నారాయణాయేతిసమర్పయామి" என்றுநாராயணனுக்கே சகலத்தையுமர்ப்பணஞ் செய்கிறதும், "తత్కురుష్వమదర్పణం" என்றுகண்ணன் கீதையில் சொன்னதும் சிவனிடத்தில் சேர்ப்பிக்கிறதற்காகவேதவிரவேறில்லை. బ్రహ్మార్పణంబ్రహ్మహవిః" என்னுங் கீதாவாக்கியத்தால் பிரம்ஹசப்தார்த்த ஸ்வரூபனாய் விளங்குஞ் சிவபெருமானையே கிரகிக்கவிடமுண்டானதால் தேவ

தாந்தர பாரம்யசித்தி யங்கேதலைகாட்டாதெனவறிக. இதை யுவமித்துரைக்குங்கால் குடிகள் கலெக்டரிடத்திற்கொடுக்குங் கந்தாய திரவியங்களைக் கவர்னர்வாங்கி.மஹாராணியவர்களிடஞ்சேர்த்து விடுவதே யோசிக்கப்படுமாகையா லிவ்வுபமானதிர்ககபரியாலோசனையில்நாராயணபரத்வம்நாடாது! நாடாது!! குடிகளுயிர்களும், கலெக்டர்கள்தேவர்களும், கவர்னர்விஷ்ணுவும், மஹாராணியார் சிவபெருமானுமாகவுவமைகூறியசாத்ருசத்தால்(கேசவம்பிரதிகச்சதி)என்பதற்குவிஷ்ணுவாதிக்கிய ஹானியுண்டாயிற்றென்க. தேவர்களுக்குப்பிறர்செய்யு நமஸ்காரம் கேசவனையடைகிறதென்பதைவிட்டுக்கேசவனுக்குத் தேவர்கள் செய்கிற நமஸ்காரம் என்றுபொருள் கொண்டுவமைகூறியவம்மூடசிரோமணியார்புத்தியின் தெளிவே! தெளிவு!! கேசவமூர்த்திக்கு அநந்யாதிபதித்வமில்லாவிடினும் சிவபக்தசிரோமணியாகையால்பிரதக்ஷிணநமஸ்காராதி ஸ்தோத்திரங்களால் அவரையாராதித்தல் சர்வவைதிகஜனசம்மதமேயாம். இதனால், ஸ்மார்த்தசிலர் (கேசவம்பிரதிகச்சதி) என்றுகூறுவதனுண்டாகிய சிவபரத்வஹானியாது? அவர் செய்யும் பஞ்சாயதனபூஜையில் சிவலிங்கப் பெருமானுக்கு மத்தியஸ்தானத்தி லுச்சபீடமிட்டு ஏனையசாளிக்கிராமமூர்த்தி முதலிய நால்வர்களுஞ் சுற்றுமூலைகளி னீச்சபீடங்களிட்டு ஆராதிப்பதுமேயன்றோ சிவபாரம்யத்தைக்காட்டும்? இன்னும், ஆவுடையாளான விஷ்ணுகீழும், லிங்கவடிவமான சிவபெருமான் மேலுமிருப்பதனாலும் வ்வுண்மைவிளங்கும். சாளிக்கிராமமாத்திரம்விஷ்ணுஸ்வரூபமென்பதொழிய வாவுடையாளை யங்ஙனம்பாஞ்சராத்திரிகளொப்பார். ஒப்பாவிடில், மோகினியவதாரஞ் செய்தவிஷ்ணுவைப் பலாத்காரஞ்செய்துதுரத்திப்பிடித்துக்கீழேதள்ளித் தர்ஷிக்கும்போது அந்தச் சிவதேஜஸை மோஹினிதாங்க மாட்டாமல் கெண்டமென்கிற

கன்னப்பிரதேசத்தால் வாந்திசெய்ததினால் கெண்டகியென்னுநதியுண்டாயிற்றெனவும், அதிலுள்ளசிலைகளே சாளிக்கிராமமும், ஆவுடையாளுமாகப்பிரத்யக்ஷீகரித்திருப்பதென்று நூல்களாலும், அநுபவத்தாலும் மேலோர்கூறுவதைப்யெப்படிபரிகரித்துக்கொள்ளக்கூடும்? சிவபெருமானை யூர்த்துவரேதசென்று வேதங்கள் கூறுமுண்மையே யன்றோ மோகினிபால்சிந்திய வவருடையரேதசு மேல்நோக்கி வாயின்வழியே வந்துவிட்டது? இப்படியனந்தபிரகாரத்தால சிவசம்பந்த நோக்கத்தால்விஷ்ணுவாராதனமும் ஸ்மார்த்தாகளுக்குப் பரிக்ருஹீதமும், சிவபரத்துவபுத்தியுமுண்டா யிருப்பதறியாது அவர்விஷ்ணுவாராதனம் பண்ணுகிறாகளேயென்று ரோதனஞ்செய்யவநதது எப்படியேற்றம் பெறும்?

மேற்கூறிய நியாயமேயன்றி அன்யதாகிரகிப்பது கூடாது. எங்ஙனமெனின், "స్తోమంవాఽహద్య్రుద్రాయస్తోష్యే యద్వారాయనమస్సాంధధిష్టన [illegible]" என்னுஞ் ச்ருதியால்சர்வதேவதா நமஸ்காரம் ஸ்ரீசிவபெருமானையே சேரக்கடவதென்னுமுண்மைவெளிப்பட்டமையா லிந்தச்ச்ருதிக்குவிருத்தபரமாக (கேசவம்பிரதிகச்சதி) என்னும் ஸ்மிருதியில் பொருள்கோடல் அசங்கதம். இந்தஸ்மிருதிவசனம் கேசவராயுள்ள நாராயணரிடத்தில் சர்வநமஸ்கார மடைவதென்று மாத்திரமே யுணர்த்திற்றன்றி நாராயணரவற்றைச்சிவனார்க்கர்ப்பணஞ்செய்கிறாரென்று விளக்கினதில்லையெனின், அந்தவாக்கியந்தானே சர்வதேவநமஸ்காரம் என்று பொதுவானே சொல்லிற்றன்றிச் சிவனை விளக்கிற்றன்றாகலின், பிரகிருதோபயுக்த சாதகமாகாதெனத் தள்ளப்படும். சர்வசப்தத்தாலே சிவனுமடங்குவரெனின், சர்வசப்தத்தாலே கேசவருமகிலட்ங்கலால் வியபிசரிக்கப்பட்டொழியும். யாவருக்கும் எஜமானனென்கையில, யாவரும் என்பதிலெஜமானனை

க்கூட்டுவதுதவறெனின், இந்திரனைத் தேவர்களுக்கெல்லாந்தலைவனென்கையில் அவன் பிரமனுக்குந் தலைவனுதலெங்ஙனம்? பிரமனைத் தேவர்களுக்கெல்லாந்தலைவனென்கையிலவன் விஷ்ணுமுதலினோர்க்குந் தலைவனுதலெங்ஙனம்? அப்படியேயன்றோ நாராயணனிடமுங்கொள்ளத்தக்கது? நாராயணரிடத்தில் சர்வதேவநமஸ்காரம் சேருமென்கையி லவருக்குக் கீழ்ப்பட்ட சர்வருமேயன்றே பொருளுண்டாமன்றி அவர்க்குப் பிரமாய்விளங்குகு சிவபெருமானு மவரி லடங்குவரெனப் பொருள்படவாது. இவ்வுண்மை விசாரத்தாலும், மேற்காட்டிய சுருதிபோதகத்தாலும்சிவனுக்கேவிஷ்ணுவின்றன சர்வதேவதா நமஸ்காரம் அர்ப்பணமாதல் வைதிகநிஷ்டராயுள்ள சத்துக்கள் துணிபாம. இப்படிப் பொருள்கொண்டாலன்றி அபபேறைதமகனுருதகரித்த ஸ்மிருதிவாகியம் பிரமாணமாகாது. மேலயாமுதகரித்த சுருதிக்கு விரோதப்பட்டுப்போமாதலால.

இதுநிற்க, சர்வகர்மாரமபங்களிலும் திரவியசுத்தி செய்யத்தொடங்குகையில புண்டரீகாக்ஷ ஸ்மரணை செய்யத்தக்கதென்றும் பாஞ்சராத்திரிகள் புலம்புவர். சாமவேதம பிரதமமந்திரத்தில் சர்வகர்மாரம்பங்களிலும் விருபாட்சஸ்மரணையே செய்யத்தக்கதென்றுணர்த்தும். "తపశ్చతేజశ్చ" என்றுபக்கிரமித்து "రుద్రాధిపతయేనమః" என்றதைமுற்றும்பிரசம்சித்து "తత్రుదర్శోపాక్షోసి" என்று கூறுகையாலும், இதற்குபப்பிரம்மணமாகச் சைவபுராணத்தில் "అపవిత్రంపవిత్రోవ సర్వావస్థాంగతోపివా। యస్మరేద్విరూపాక్షం సబాహ్యాభ్యంతరశ్శుచిః" என்று பெறப்பட்டதாலும் சர்வகர்மசமாராத்யனுகவாதியந்தங்களில் சிவபெருமானே சொல்லப்பட்ட வுண்மை வெளிப்பட்டதனால் நித்தியகர்மமானசந்தி விஷ்ணுபாரம்யம் பெறுமென்றழுவந்த நிருஷ்டோக்தி நிரஸ்தமாயிற்றெனக.

மரணை செய்கின்றார் என்று நகையுரையுநாசம் பெற்றதென்க. ஆகவே, சாமானியவிப்பிரர்க்கே அது ஆசாரமாயிற்றென்பது வெளிப்படை. அவரோறு மவ்வாசாரமற்றுவதென்னையெனின், மேல்(கேசவம்பிரதிகச்சதி) என்னும் வாக்கியத்துக்குரைத்த நியாயபரியாலோசனையிலதனாலும் பாதகமுண்டாகாதென்க. பிறர்செய்யு நமஸ்காரங்களை ஸ்மார்த்த எதிகள நாராயணருக்கு எப்படி வந்தனபூர்வகமாய் அர்ப்பணம்பண்ணுகிறார்களோ அந்தப்படிக்கே நாராயணரு மவற்றைவாங்கிவந்தனபூர்வகமாயச் சிவனிடம் அர்ப்பணம்பண்ணி விடுவாரெனின், அதனால விஷ்ணுவுக்கு உதகர்ஷம பிராப்தமாயிறெப்படி? விஷ்ணுவாராதனமுதலியன சைவருக்கும், ஸ்மார்த்தருக்கும விரோதமாயினன்றே நாராயணஸ்மரணையால விஷ்ணுவாதிக்யந் தலையெடுக்கும? சிவபக்தாகரேசரென்றெண்ணப்படுவாராகிய நாராயணரை ஸ்மரித்தல சிவஸ்மரணை மாத்திரமாகவே கொள்ளப்படுமென்க. நாராயணஸ்மரணை செய்தபோதிலுங் குற்றமில்லையெனபது மாத்திரமேயன்றி விசாரிக்கவந்ததனறி அந்தநாராயணஸ்மரணையே எதிகருக்குரித்தான முக்யமந்திரமென வங்கிகரிக்கநில்லை! அவர்க்குமுக்கிய மந்திரம் பிரணவமாகிய தாரகமேயாகையால் மந்திரராஜமாகிய வப்பிரணவமாகிய வுயிரீங்கியவழிக் கேவலஞ் சடத்வமபெறுமுப பிணமாத்திரமாகவே கழிக்கப்பாலதாகு மவ்வசட்டுமந்திரம் எப்படி யெதிவராக்கு முக்யப் பிரதாயகமாகும்? எந்தப பத்ததிக்காரரும் எதிகளுக்குநாராயணஸ்மரணை விதியாமையாலும், எதிகளுட சிலர் பிரணவத்தையே யுச்சரித்தலாலும், வேறு சிலர்* சிவஸ்மரணையே செய்தலாலு மவை சிஷ்டாசார மாத்திரமாகவே கிரகிக்கப்படு மென்க. இவ்வுண்மையை விசாரியாமல் சிவவேதியருக்கும், சாமானியவேதியருக்கும் வேற்றுமைதெரியாது குழறிவழிந்த வப்பட்

டைகாமப் பாஞ்சராத்திரியார் விஷ்ணு பாரம்யம் நாட்டவெழுந்தது சேற்றில்நட்டகம்பமாயிற்றென்க.

இங்ஙனிருக்க, பகவத்கீதையிலுள்ளதாகவொருவசனத்தையும், பாகவதத்திலுள்ளதாகவொருவசனத்தையுங்காட்டி யவ்விரண்டு வசனங்களாலும் விஷ்ணுவைக்காட்டிலும் வேறுதேவதாராதனஞ் செய்தல் பிழையாமென்னும் பொருளை விளக்கி, அதனால் ருத்ரேந்திராதியாகளுடைய அந்தராந்தரங்களை யறிந்து விசிதமாகத் தெரிவிப்பது எப்படித் தூஷணமாகுமென்றுதாம்செய்யுஞ் சிவநிந்தைக்குப் பரிகாரந்தேட முயன்றனர்.

இதனை முறையே பரிகரிப்பாம். கீதையில் "ఉత్తమః పురుషస్త్వన్యః పరమాత్మేత్యుదాహృతః। యో లోకత్రయమావిశ్య బిభర్త్యవ్యయ ఈశ్వరః" என்னும வசனத்தால் அழிவில்லாத ஈசுவரனென்று யாதொருவன் மூன்றுலோகத்தையும் பரித்துக்கொண்டிருக்கின்றானோ, அன்னியனும், உத்தமனுமாகிறவவனே ஆத்மாவென்றுசொல்லப்பட்டான் என்றுபெறப்பட்டது. இதனால், புருஷனென்று சொல்லப்பட்டவன் யாவனோ, அவனே யாச்சிரயிக்கத்தக்கவனென்றுகொண்டு என்னாலே சரணமடையப்பட்டிருக்குமந்த வீசனையே நீயுஞ் சரணமடையக்கடவாயென்றுஅர்ச்சுனனைக்குறித்துக் கண்ணன் சொல்லிய வாய்மைப்பாடுவெளிப்பட்டது. "ఈశ్వరస్సర్వభూతానాం హృద్దేశేఽర్జున తిష్ఠతి। భ్రామయన్సర్వభూతాని యన్త్రారూఢాని మాయయా। తమేవ శరణం గచ్ఛ సర్వభావేన భారత। తత్ప్రసాదాత్పరాం శాన్తిం స్థానం ప్రాప్స్యసి శాశ్వతం" என்னும் வசனத்தால் வாராய் அர்ஜுனா! மாயையாகிற யந்திரமென்னுஞ் சக்கரத்தை யடைந்திருக்கிற சகலபிராணிகளையுந் தனது மாயையால்சுழற்றிக்கொண்டிருப்பவராய்ச் சகல பிராணிகளுடைய ஹ்ருதயத்தில்

யாவரிருக்கின்றனரோ, அவனையே சகலமான தன்மையாலுஞ் சரணமடையக் கடவாய். அந்த ஈசுவரனுடையவநுக்கிரகத்தினால் சர்வோத்தமமான சாந்தியையும், சாசுவிதமான ஸ்தானத்தையும் அடைவாயாக என்று கண்ணனருச்சுனனுக் குரைத்ததாக வெளிப்பட்டது. எந்தவிடத்திற் சேர்ந்தால் திரும்புகிறதில்லையோ வென்றுகூறி மீண்டுஞ் சாசுவிதமான ஸ்தானத்தையடைகிறாயென்று ஏகப்பிரயோஜனத்தையே யுணர்த்துந்தன்மையாலும், உத்தமனாயுள்ளவனும், அன்னியனுமென்று சமானாதிகரணங்களாயுள்ளவைகட் கோரிடத்தில் புருஷசப்தம் பிறந்துள்ள தன்மையாலும், ஈசுவரனென்னுஞ் சத்தங்களுக் கர்த்த மொன்றாகவே தோன்றுகையாலு மின்ன சுபாவசிலங்கண்டபாட்டிற் கேற்பக் கண்ணனால விளங்காநின்ற பொருட்டலைமை பரமசிவனிடந்தானே யெய்திற்றென்னும்படிக் கண்ணன்றானும்பிரபத்திபண்ணி வணங்கக் கடவதாகியபொருள்வர்ணிக்கப்பட்டது. இப்படி யொவ்வொரு வாக்கியமும் சிவபாரம்யத்தையே காட்டவெழு முண்மையை யறியாமல் கீதையில் விஷ்ணு பரத்வமுளதாகச் சொப்பனங் கண்டெழுதது சோம்பேறி வாதமாயிற்றென்க.

இனிச் (சிவபாரம்யப்பிரதரிசினி) என்னும் பிரபந்தம் யாம் செய்துள்ளேமாகையால், அதனுள்(கங்காதாரணப்பிரக்யானம்) என்னும் பகுதியில் கிருஷ்ணபாகவதம் பிரமாணமா, அப்பிரமாணமா வென்பதைப் பரிஷ்கரித்திருக்கின்றனம்: அதனால் ஷைபாகவதத்தாற் பெறப்படும் விஷ்ணு வாதிக்ய வசனங்களசாமஞ்சசமேயாம். அதவா பிரமாணமெனக் கொண்டபோதும், அந்தப்பாகவதத்திற்றானே "[illegible]" என்னும் வசனத்தால் சர்வஜ்ஞத்காரணரும், சமஸ்தசரீர அந்தராத்மாவுமாகி

யசிவபெருமான் உனது வேகத்தைத் தரிப்பாரென்று கங்கையைப்பார்த்துப் பகீரதன் சொன்னதாகப் பெறப்பட்டது. "నతేగిరిత్రాఖిలలోకపాలవిరించవైకుంఠసురేంద్రగమ్యం। జ్యోతిః పరంయత్రరజస్తమశ్చసత్త్వంనయద్బ్రహ్మనిరస్తభేదం" என்னும் வசனத்தால்ஹேபரமசிவா! உனது ஜ்யோதியானது திக்பாலகாள், விஷ்ணு, இந்திரனிவர்களாலு மடையக்கூடாதது, சத்வரஜஸ்தமோகுணரஹிதமாகவும், பேதரஹிதமாகவு முள்ளது எனவும் பெறப்பட்டது. இவ்வசனத்தில் குணவிசேஷங்களாகிய வுபாதியோடு கூடிய பிரம்ஹவிஷ்ணுருத்ர பேதரஹிதமென்பதும், இவர்களுடைய சமஷ்டிருபமான பரசிவாத்மகமென்பதும் நிரஸ்தபேதமென்பதனாற் பெறப்பட்டது. "తదుగ్రవేగందిశిదిశ్యుపర్యధో విసర్పదుత్సర్పదసహ్యవీర్యః। భీతాః ప్రజాః దుద్రువురంగసేశ్వరాః అరక్ష్యమాణాశ్శరణం సదాశివం" என்னும் வசனத்தால் திக்குகளிலும், ஆகாசங்களிலும் பூமியிலும் பரவிச்சகிக்கக்கூடாத வீரியத்தையுடைய காளகூடத்தினுக்கிரவேகத்தைக் கண்டு பயந்தவர்களாகி யொருவராலுங்காப்பாற்றப்படாதவர்களாயத் தங்கள் பிரபுககளுட்படப்பிரசைகள் பரமசிவனை சரணமாக வடைந்தார்கள்என்று பெறப்பட்டது.

இப்படிச் சிவபாரம்யங்களே பாகவதத்தாலும் பெறப்படுகையா லதுகொண்டு சிவாபகர்ஷத்துக்கிடந்தேடியது செல்லாது! செல்லாது!! மேல்கதையினாலும், பாகவதத்தாலுங் கிருஷ்ணனும, அர்ஜுனனும் சிவாராதனம்பண்ணினார்க ளெனவும், காளகூடபக்ஷண சமயத்தில் பிரம்ஹவிஷ்ணுவாதி சமஸ்தமானபேருந் திரிமூர்த்தியுத்தீர்ணராகிய சிவபெருமானையே சரணமாகவுடைந்தார்களெனவும் பெறப்பட்ட வுண்மைகண்டறியாது விஷ்ணுபக்தனானவன் சிவனைத் தரிசித்தல் முதலிய சத்காரங்களைச் செய்யக்கூடாதென்றழுவத்ரோதனமொழிந்தது! ஒழிந்தது!! சக்கிராங்கிதனாகிய விஷ்ணுபக்தன் பரிபாகஹீனத்தினால் சிவாராதனத்துக்கனர்

ஹத்வமுடையாரென்ப தெமக்குமுடன்பாடே யாம். இவ்வுண்மை முடிவால் சிவபக்தாக்ரேசரர் புள்ளபேர் சிவேதரபரத்வ புத்திபண்ணி விஷ்ணுவாதிதேவதாந்தரத்தில் பக்திபண்ணுத லசப்யமென்று கூறும் பாத்மபுராணவசனத்தை மீண்டும் பிரவசனிப்பாம் "యస్తుసర్వస మంత్రేణ శివబ్రహ్మాదిజాయతే। శివబ్రహ్మసంబద్ధో సర్వలోకోపచారిణం" என்னும் வசனத்தால் சிவன் கடவுளல்ல விஷ்ணுவேகடவுள் என்னும் பாபபுத்திமேற்கொண்டு யாவன் விஷ்ணுவைத் தரிசிப்பானோ, அவன் உடனே சிவத்துரோகியாய் விடுகிறான், சிவத்துரோகம் பெற்றவதனால சந்தேகமின்றி நரகானுபவசித்தி யவனுக்குப் பிராபதமாம் என்று பெறப்பட்டது. இவ்வுண்மையே (தற்றைவார்சடையெம் மண்ணல் கண்ணுதல்பாதநண்ணி, மற்றுமோர்தெய்வந் தன்னையுண்டென நினைந்தெம்மாற், கற்றிலாதவனாக்கண்டா லெம்மகாமஞ்சுமாறே) என நம்பெருஞ் செல்வமாய் விளங்கும் ஸ்ரீமந்மணிவாசகப பிரபுருதிகள் கட்டளையிட்டருளியபடியுங் காண்க. இன்னும், "மாயனுன் முதன் முதலிய தேவரைவணங்கி, மேயபூசனைசெய்பவர் நரகிடைவீழுவார்" என்னுமான்றோர்வசனமுஞ் சான்றுதல்காண்க. இன்னும் விரிப்பிற்பெருகும். மேல்விசாரத்தாற் பெறபபட்டன வெல்லாம் விஷ்ணுவைச சிவனுக்குப் பரனாகவணங்குதல கூடாதென்ப தொழிய வவனை யறவேவணங்காமல் கைவிடவேண்டுமென்பது கருத்தன்றாம். "నారాయణాది నామాని విస్సృజ్యనపచాండకః" என்னும வாக்கியத்தால் விசாரமின்றி நாராயணாதிநாமங்களை விட்டுவிட வேண்டியது என்று கொள்ளக்கிடைக்குமே யெனின், நாராயணாதிநாமங்களையே மோக்ஷப்பிரதாயகமெனக் கொள்ளுமவிவேகர் தொலைப்பித்தற்கே அது உபகாரமாகும். எனவே, மோக்ஷத்துக்குப்பரம்பராசாதனமெனக்கொண்டு சாட்சாத்தாக ஸ்ரீபஞ்சாக்ஷரத்தையே ஸ்தூலசூட்சமங்களாகக் கொள்ளவேண்டுமென்பது வெளிப்படை. இத

றல், விஷ்ணுமூர்த்தியைச்சாம்பவராயுள்ளபேர்துவேஷியாரொன்பது சித்தம்.

(பின்னையது)

இவ்வுண்மையை யறியாமல் “యస్సునారాయణం ద్వేష్టి” என்னும் வசனமொன்றெழுதிச சைவராயுள்ளபேர் விஷ்ணுவைத் துவேஷிப்பதாகவக்கார்த்தபராயர் கதறியழுதனர். “రుద్రఃపశుకర్తా రుద్రోయాగదేవః। విష్ణు రధ్వర్యుఃహోతేన్ద్రః దేవతాయజ్ఞభుక్ మానసంబ్రహ్మ” என்னுஞ் சுருதியால் விஷ்ணுபக்வான யாகத்துககு அத்வர்யுவாதலெ பெறப்படுகையால் யாகசீலர்களாகிய வைதிகநிஷ்டராயுள்ளபேர்க்கு விஷ்ணுதுவேஷமுண்டாமென்பதெப்படி? இன்னும், பஸ்மஜாபாலத்தில், “లింగరూపిణమాం సంప్రాజ్యచింతయంతి యోగినస్సిద్ధాసిద్ధింగతాయజంతి యజ్వానో మామేవ స్తువంతివేదాస్సాంగాస్సర్వోపనిషదస్సేతిహాః సానహత్తోస్యదహ మేవస ర్వజ్ఞమయిసర్వం ప్రతిష్ఠితం-తతఃకాశ్యాం ప్రయతైరేహమన్వహం పూజ్యస్త త్రగణారుద్రాననాః నానానఖా నానాశస్త్రధారిణో నానారూపధరానా నతస్స్థితాస్తైసర్వే భస్మదిగ్ధాంగారుద్రాక్షాభరణాఃకృతాం జలయోనిత్య మధ్యాయంతి తత్రపూర్వస్యాందిశిబ్రహ్మకృతాంజలిరహనిశముపాస్తేపా శ్చిమాయాందిశిఃవిష్ణుః క్రతుర్మూర్ధన్యంజలిముపాస్తె ప్రతీచ్యామింద్ర ప్రసన్నతాంగ అపాస్తె ఉదీచ్యామగ్నికాయామాముపాసతే॥” என்றுசொல்லிய பின்னர “పశ్చిమాయాందిశిముక్తిస్థానంముక్తిమంటపసంజ్ఞితం తత్రానేకగణాః పాలకాస్సాయుధాః పాపఘాతకాస్తత్రబ్రుషయశ్చాంభ వాఃపాశుపతామహా శ్శైవావేదావతంసాశ్శైవం పంచాక్షరంజపంతస్తారకంస ప్రణవంభావయమానాస్తిష్ఠంతి”=என்று பிரவர்த்தித்த வாக்கியங்களால் இலிங்கவடிவமாகிய என்னைகன்றுபூசித்துயோகிகளுஞ் சித்தர்களுஞ் சிந்திக்கின்றார்கள், சித்தியையடைகின்றார்கள், தீக்ஷிதர்களும் என்னையேயஜனஞ்செய்கின்றார்கள், சாங்கங்களானவேதங்களும், சர்வோபநிஷத்துக்களும் இதிஹாசத்துடன் என்னையேதுதிக்கின்றன, என்

ளைத்தவிர வேறேயொரு பதார்த்தமுமில்லை, நானேசகலமுமாயிருக்கின்றேன், என்னிடத்திலேதானே சகலமுமிருக்கின்றன. அதனால், காசியில் மரணவிச்சையுடையவரால் இரவும்பகலும் நானே பூசிக்கவுரியவனாகின்றேன், அவ்விடத்தில், பயங்கரமான முகங்களுள்ள கணங்கள் நாநாவிதமான நகங்களுள்ளனவும், நாநாவிதமான சஸ்திரங்களைத்தாங்கினவும், நாநாவிதமானரூபங்களைத்தரித்தனவும், நாநாவிதமான வடையாளங்களைப்பெற்றனவுமாக விருக்கின்றன. அந்தக்கணங்கள் யாவும் விபூதி தாரணஞ் செய்துகொண்டிருப்பனவும், ருத்திராக்ஷமாலிகாபரணம் பூண்டனவும, அஞ்சலி கூப்பினவுமாகி நித்தியம் அபித்தியானஞ் செயதுகொண்டிருககின்றன. அவ்விடத்தில் பூர்வதிக்கில பிரம்ஹாவானவர் அஞ்சலி செய்துகொண்டு இரவும்பகலும் என்னையேயுபாசித்துக்கொண்டிருக்கின்றனர், தென்திக்கில் விஷ்ணுவானவர் சிரசில் அஞ்சலி கூப்பினவராகவே யுபாசித்துக் கொண்டிருக்கின்றனர், மேற்றிசையில், இந்திரன் வணக்கத்துடனுபாசித்துக்கொண்டிருக்கின்றனன், வடதிக்கில அக்கினி வடிவத்தையுடைய வுருத்திரர் என்னையுபாசித்துக்கொண்டிருக்கின்றனர் என்று சிவனருளிச்செய்ததாகப் பெறப்பட்டதோடு தென்திசையில் முக்திஸ்தானமென்னு மோரிடத்தில் முக்திமண்டபமொன்றிருக்கின்றது, அந்தமஹாமண்டபத்தில் அநேககணங்கள ஆயுதத்துடன் கூடினவாகிலோகபாலனஞ் செய்கின்றனவும், பாபிகளைப்பிடிக்கின்றனவுமாக விருக்கின்றன, அவ்விடத்தில், மஹாரிஷிகளும், சாம்பவர்களும், பாசுபதர்களும், மஹாசைவர்களும் வேதபூஷணமானசைவபஞ்சாக்ஷரத்தையே தாரகமாகப் பிரணவத்துடன் ஜபஞ்செய்துகொண்டு சந்தோஷத்துடன் வசிக்கின்றார்கள் என்று வெளிப்பட்டது. இங்ஙனம் பெறப்பட்ட வுபநிஷத்பிரமாணங்களால் காசிஸ்தானவாசிகள் தங்

மையினிதுவெளிப்பட்டமையால் அந்தக்காசியில் தென்றிசையிலிருந்துகொண்டு சிரசில் அருசமி செய்தசிற்றவிராதவராகி யிலிங்க பூசையால் சிவோபாசனஞ் செய்துகொண்டிருப்பவராகிய விஷ்ணு மூர்த்திக்கு விபூதிருத்ராக்ஷதாரணத்வம், பரமசாம்பவத்வம், பரம பாசுபதத்வம், சைவபஞ்சாக்ஷரஜபகர்த்திருத்வ முதலான சகலமுக்கியசைவதர்மங்களுஞ் சித்தித்திருப்பதால பாசுபதாக்கிரகண்யரான விஷ்ணுவை யொருபாசுபதனுந் தூஷிக்கமாட்டானல்லவா? இவ்வுண்மையறியாது சைவர்கள் நாராயணனைத் துவேஷிக்கின்றார்க ளென்று குரைத்தழும் வெறிகொண்ட நாயையென்ன செய்தாற்றீரும்? மேலுண்மையால் வைதிகத்தாலுஞ் சைவததாலும் விஷ்ணு துவேஷத்துக் கிடமகாறுத பெற்றிக்கேற்ப வைதிகசைவங்களை யவலம்பித்தவராகிய சிவனடியாராயுள்ளபேர் வைதிக சிரோமணியும், சைவசூளாமணியுமாய் விளங்கும் விஷ்ணுபகவானிடத்தில் அத்தியந்தபிரீதியே பாராட்டிவருகின்றன ரென்பது அநுபவசித்தமாதலேனோ கண்ணுக்குப்புலப்படாமல் அறிவுகெட்டமாடுகளாகவப்பஞ்சராத்திரப்புல்லர் தலையிடறிவீழ்கின்றனர்? மேல்விசாரத்தால் "[illegible]" என்னுங் கழுதை வசன மொன்றைக்காட்டிச் சிவலிங்க பூசையை நிந்தித்த வக்கழுதைராயரோ நாராயணத்வேஷியாயினரென்பது சித்தம்! சித்தம்!! நாராயணர்தன்மை மேலுபநிஷத்தின் படியாதலைவிரோதித்துஅவருடையஸ்வாநுஷ்டானமாகிய வப்பரமசைவதர்மங்களை நிந்தித்தலைக் காட்டிலும் அந்நாராயணரைத்துவேஷிப்பதற்கு வேறுநிதரிசனங்கள் தேடவேண்டா. இதனுல் நாராயணரைத்துவேஷிப்பதனுல் பிராப்தமாவதாகிய "[illegible]" என்பது கோட்டியடியாய் அந்தஸ்வபசர் தலையிலே தானேவிழுந்ததென்க.

இத்தவிசாரத்தால் விஷ்ணு மூர்த்திக்குப் பாரத பாகவதராமாயணாதிகளாலுந் நிர்மாணிக்கப்படாத புண்டரமாலாதாரணமுந் நிர்மானமாயிற்று. இவ்வுண்மையையறியாமல் யாம் வைஷ்ணவமணிகளென்னும் பட்டமாத்திரந்தாங்கி விபூதி ருதராட்சங்களைத் தூஷிப்பதே பெருந்தவமெனக்கொண்டு வெளிப்பட்டவப்பாஞ்சராத்திரபாஷிசர் "చతుర్వేదధరో విప్రః భూతిరుద్రాక్షవర్జితః। యథాచండాలస్తం తద్వార్జితధ్రువం" என்னும் வசனத்திற்போந்த (భూతిరుద్రాక్షవర్జితః) என்னும் பகுதிக்குப் பூதியும் ருத்ராக்ஷமுமே ஹேதுவாகச சிஷ்டர்களாலே வர்ஜிககபபட்டானென்றபடியெனப பொருள் கொண்டனர். இந்தப் பொருளைத் தாபித்தற்கு விபூதி ருத்ராக்ஷங்கள அசேதனங்களாகையால அவற்றிற்கு வர்ஜனகர்த்திருத்வங் கூடாதென்பதே சாலுமெனவுஞ் சமாதானங் கூறினர். இபபடிபபொருளகொண்டு பஸ்மநிந்தை செய்யவந்த வப்பள்ளச்சிரேஷ்டர் "సర్వసత్కర్మవర్జితః" என்னும் வசனத்துக்கு என்னபொருள்விரிப்பரோ வறியேம். சத்கர்மங்களிடத்தும் வாஜனகர்த்திருத்வம் சித்தியாமையால் சத்கர்மங்களைத் தரித்தமையே ஹேதுவாக வொருவன் வர்ஜிக்கப்பட்டானென்றே பொருள்கொள்ளவேண்டிவரும். சர்வசத்கர்மங்களையுஞ் செய்தவனைச் சிஷ்டர்கள் தியாகஞ்செய்வார்களாகில் (యాన్యస్మాకం సుచరితాని త్వయోపాస్యాని) என்னுங் கருதியால் எவை நமக்கு நல்லநடத்தைகளோ அவை யுன்னா லுபாசிக்கத்தக்கன வென்று பேறப்பட்டவுண்மையும் பொய்ப்பட்டொழியும். இப்படி விபரீதத்தாற் புலம்பி யழியுஞ் சங்கம்சீ! சீ!! கொடிது கொடிது. இந்தத்துர்வாதியால்செய்யப்பட்டதைக் கண்டிக்க நாமேர்ப்பட்டது அநுசிதமாக விருந்தபோதிலும் உபநிஷத்விசிட்டமான சிவபாரம்யம் வெளிப்பட்டு ஸாதுக்கள் சந்துஷ்டனாகிப் பிழைக்க ஹேதுவுண்டாகையா லிந்தநம்முடைய பிரவி

ருத்தி யுதிதந்தான். வேதாந்தமென்னும் பெயரினவாய் நூற்றெட் டுபநிஷத்துக்கள் பிரகாசிக்கின்றன வற்றுள் விபூதிதாரணத்துக்கு ஆதாரமான பிருஹஜ்ஜாபாலம், பஸ்மஜாபாலம், காலாக்னிருத்ரம் என்னும் மூன்றுபநிஷத்துக்களிருக்கின்றன. கோபீசந்தனபுண்டரதாரணத்துக்கு ஆதாரமான வாசுதேவோபநிஷத்தொன்றிருக்கிறது. இன்னும் ஸ்ரீருத்ராக்ஷதாரணத்துக்கு ஆதாரமான ருத்ராக்ஷோபநிஷத்தும், பத்மாக்ஷமாலாதாரணத்துக்காதாரமான அக்ஷமாலிகோபநிஷத்து மிருக்கின்றன. இவைகளேயன்றி சித்ரோர்த்வபுண்டரதாரணம், துளசிகாஷ்டதாரணம், மருசஞ்ஜாலதாரணமித்யாதிகடகுப் பிரமாணமாக வோருபநிஷதவாகியசகலமாவது காணவில்லை. இவ்வமங்கலதாரணங்களுக்கு யாமும் வைதிகனெனப் பிதற்றித்திரியு மெந்தப்பாஞ்சராத்திரியாவது ஒருபநிஷத் பிரமாணத்தைமாத்திரங் காண்பிப்பானுகிலன்றோ வவனுசாரத்தை வைதிகராயுள்ளபேரங்கீகரிப்பா? மஹரிஷிகளிட்ட சாபத்தால் வெள்ளைமணயோனி புண்டரத்தை யவ்வவைதிகபுமான்கள் பாஞ்சராத்திரப்படியே தரித்துக்கொண்டு கொண்டாடிப்பதில் யாதொருகோட்டமு மெமக்கின்றென்க. அவர்கள் தலையெழுத்தெல்லா மிவ்வளவின் முடிந்திருப்பதறியாது தலைகால்தெரியாமல் வைதிகமாயுள்ள பஸ்மருத்ராக்ஷங்களைத் தூஷித்துத் திரியுமவர் சாத்ருசமே! சாத்ருசம்!! இதுகலிமஹிமையென வறிக.

மேல்யாமுதகரித்த பஸ்மஜாபாலத்தில்சாம்பவர்கள், பாசுபதர்கள், மஹாசைவர்கள் என்னும் பாகுபாடடாற் பிரித்தோதப்பெற்ற சிவாகமநிஷ்டமான சைவபேதங்களில் சாம்பவர்கள் என்பது சிவபக்தஜன சமஷ்டிவாசகமும், பாசுபதர்கள் என்பது பசுபதிமுகோத்பவராகுந்தன்மையுண்மையால் ஆதிசைவரையே காட்

டும் வியஷ்டிவாசகமும், மஹாசைவர் என்பது பிரம்ஹ தேவர் முகோத்பவராகுந் தன்மையுண்மையால் சாமா மானியத்விஜனையே காட்டும்வியஷ்டிவாசகமு மாகச் சத்துக்கள் பொருள்விரிப்பர். இப்படியுபநிஷத்துக்களு பலவற்றுனும புகழ்ந்தோதப்பெற்ற ஜகதாசாரியமூர்த் திகளாகிய ஆதிசைவரையு மவ்வந்திமஸ்ரேஷ்டர் தாறு மாறாய்ப் பிதற்றியிருக்கின்றனர். இதற்குப் பரிஹாரம நாம் வெளியிட்டிருக்கும ஆதிசைவப் பிரபாவத்தாலு ம், இனிவெளியிடப்போகுரு சிவத்விஜோத்கர்ஷ தீபி கையாலும் விவேகிகள் தேடிக்கொள்வார்களாகையா லிங்கே விஸ்தரியாதுவிட்டனம.

இங்ஙனநிற்க, சிவாதிக்யரத்நாவளி முதற்பாகத் தில் (పత్యురసామంజస్యాత్) என்னுஞ் சூத்திரத்தால் வியா சபகவான் சிவாகமங்களை கண்டித்தார் என்று பாஞ்ச ராத்திரப் பறையர் பிரலாபித்துவரும் ரோதனப்பாட் டை ஸ்ரீசுந்தரசிவாசாரிய மூர்த்திகள் கண்டந்துண்ட மாய்ச் சேதித்தமானக்கேட்டால மனம்பொறுக்கி யப் பேதைமக்கள் கும்புகூடியழுது பேரிழவுகொடுத்த பெ ருமிதத்தைச் சற்றேபரியாலோசிப்பாம்.

"முன்னையது" என்னும் போலிசசுவடியில்வேதத் தினும் புகழப்பெற்ற வியாசர் "పత్యురసామంజస్యాత్" என் றுகூறினரெனவும், அதற்குப பாஷ்யஞ்செய்த சங்கரா சாரியார பசுபதி சம்பந்தமாகிய பாசுபதம் அநாதரணிய மெனக் கண்டித்தாரெனவுங் கூறியிருத்தலே ஸ்ரீ சுந்தர சிவாசாரிய சுவாமிகள் தமது ரத்நாவளியில் தக்க சமா தானங்களால் பரிகரித்து விட்டனர். எங்ஙனமெனின், வியாச சூத்திரத்துக்கு ஏற்றத்தை நாட்டவேண்டியே யச்சூத்திரகர்த்தாவாகியவியாசனாவேதம்புகழ்கின்றது என்று இப்போலிப்பிரபந்த கர்த்தர் எடுத்துக்காட்டினு

ராகையால் ஸூத்திரகர்த்தாவாகிய வியாசனை வேதம் புகழ்கின்றபடியே பாஷ்யகர்த்தாவாகிய சங்கராசாரியனைவேதம் புகழாமையால் வியாசருக்குண்டாகிய வேற்றம் சங்கராசாரியருக்குண்டாகாதெனவும், வேதம் சங்கராசாரியனைச் சொல்லாவிடினும் வேதத்தினாற்புகழப்பெற்ற வியாசவசனத்துக்குப் பாஷ்யமெழுதினாராகையால் அவர்வசனமுமங்கீகரிக்கத்தக்கதெனின், சங்கராசாரியைப்போலவே அந்தவியாசவசனத்துக்கு வேறுசிலருந்தனித்தனி அசசங்கராசாரியர்பாஷ்யத்தைச்சிந்துசிந்தாய்ச்சேதித்து வேறு வேறு அபிப்பிராயங்களை நாட்டிப் பாஷ்யங்கள் செய்திருக்கின்றாராகையால் சங்கராசாரியர்வசனத்துக்கேயேற்றங்கூறுவது கூடாதெனவும், அப்படிப் பாஷ்யகர்த்தர்களாய் வெளிபட்ட வாசாரியர்களில் இராமாநுஜன் என்னும் அநதியஜாதிய னொருவனாகையா லவனுரையை யங்கீகரித்தநுட்டிப்ப தொழிந்து சங்கராசாரி யநுட்டானத்தைத் தழுவற்பாலரல்லாதபாஞ்சராத்திரிகள் வீணே சங்கராசாரியர் சொன்னார் சொன்னாரென்று மனந்துடிப்பது அசங்கதமெனவும், சங்கராசாரி யுரையை யங்கீகரித்து அததால்சிவாகமதூஷணஞ் செய்யவந்த படியே அசசங்கராசாரியர் தூஷித்துரைத்த வைஷ்ணவசித்தாந்தத்தையு மகற்றுமலேறபது கூடாதெனவும் பலநியாயங்களால் பிரவசனஞ் செய்தபடியாம. இதைப்பரிகரித்துக் கொள்ள வகைகெட்ட வக்குருட்டுதாதர் ஸ்ரீகண்டசிவா சாரியனை யெந்தவேதம் புகழாநின்றதென்னுங் கடாநிகழ்த்தினர். இது மூடாக்ரேசரின் முதற்றாம்பூலம் வாங்கத்தக்க வவர்குஞ்சுகளாகிய மூழுமடையருக்கே பிரயோஜனமாம். வியாசர் பொய்சொல்லாதவராக வேதம்புகழ்கின்றதென வவரேயுரைத்தபடியா லன்றோ சங்கராசாரியைப் பொய்சொல்லாதவனென வேதம் புகழ்கின்றதாவென்னும் வினாநிகழ்ந்தது? வேதம்புகழ்ந்ததா லுயர்

வும், புகழாமையாற் றாழ்வுமுண்டெனக் கருதி வியாசருக்கேற்றம் புகலவந்தவர் தாமேயாக, அதைவிட்டு ஸ்ரீகண்டரை வேதம்புகழ்ந்ததா வென்று வினவியதென்ன பேதமை? இப்படியேஅந்நியஜனாகிய இராமாநுஜனையெந்தவேதம்புகழ்ந்தது என்னு மாசங்கையே யுண்டாகாது? வேதம் புகழ்ந்தமைகொண்டே யுயர்வும், புகழாமைகொண்டே தாழ்வுங்கூறுவது எமக்கொள்கையன்றாம். வேதம்புகழ்வதனு லுயர்வின்மையென்பது மெமக்குடன்பாடன்றாம. எங்ஙனமெனின், வேதத்திற் புகழப்பெற்றவனாகிய பிரமன் விஷ்ணுவோடு பொய்பேசிப்பூசையுங்கோயிலும் போக்கிக்கொண்டபடியும், வேதத்திற புகழப்பெற்றவனாகிய தக்ஷன் சிவனை விரோதித்துத் தலையிழந்து பின்னராட்டின் றலையை யடைந்தபடியும், வேதத்திற் புகழப்பெற்றவராகிய விஷ்ணுவானவர் பொய்பேசி உமாதேவியாரால மலைப்பாம்பாகச்சபிக்கப்பட்டபடியுமே போதுமான நிதரிசனமாம். இன்னும் வேதத்தினுற் புகழப்பெற்றவராகிய சிவபெருமான் நித்தபுத்தமுக்த சத்திய பரமாநந்தஸ்வரூப லட்சண விசிட்டராகும்படியு மமைவுடைத்தாம். இவ்விரண்டுபடியாலும் மேலுண்மையை விவேகிகள் முறையே தெளிந்திடுவரென்க.

இதுநிற்க, அந்நியஜபாஷ்யத்தை ஸ்ரீபாஷ்யமெனக்கொண்டாடித் திரியு மவ்வந்நியன் குருவாவார் ஸ்ரீபாஷ்யகாரராகும் நமது ஸ்ரீகண்டமூர்த்திகள் விஷயத்தில் மலையைப்பார்த்து நாய்குலைக்கிறதுபோல் அந்தமூர்த்திகள் பூர்விகசைவஸித்தாந்தத்தைக் கெடுத்துவிட்டாரென்ற தேசயாதி சிலதப்புரைகளை வீணேபிதற்றினர். அப்படிச் செய்தவன் தம்மவந்நியஜனேயாம். எங்ஙனமெனின், பூர்விகவைஷ்ணவராயுள்ள சடகோபன் பேயான், பொய்கையான், பூதத்தானென்பவராலாசரிக்

கப்படாத வெள்ளைமண் யோனிபுண்டரதாரணம், சக கிராங்கன முதலிய துராசாரங்களை யவலம்பித்து வைதிகப்பிரஷ்டனாய்த் திரிந்த சீரப்பாடி ப்ரகிருதாசாரத்தாலும், பூர்வீகபத்ததிகளாலும் விவேகிகள்கண்டுணராமற்போகார். அவன்றம்பி யநகுதனென்றபடி மொட்டை நாமம், காவிழுத்தநாமம் போட்டுக் கட்சிக்காரராக வெளிப்பட்ட பார்ப்பாரக் கறுப்பன், பனமரக கரியனிவர்களுமே யன்றோ தங்கள் பூர்வாசாரியர்களுக்குப் பங்கநாமஞ் சாத்திப் பிரதிஷ்டை பெற்றவர்கள்? சைவத்தில் உடசமயம், உடபுறசமய மென்னும் பகுதிக ளதிகாரபேதத்தாலுண்டாகிய பேதவாதம், அபேதவாதம், ஐக்கியவாதம், ஸமவாதம், ஸங்கிராந்தவாதம், நிமித்தகாரண பரிணமவாதம், பாஷாணமோக்ஷவாத மித்தியாதிஸித்தாந்தங்க ளுண்டாயிருத்தல் ஸித்தம். இதனையும் வேதசிவாகமங்களிற் பெறப்படடனவேயாம். இவற்று ளொன்றே ஸ்ரீகண்டாசாரியர் சித்தாந்தமாகையால அவ்வாசாரியமூர்த்திகள் ஸ்வசித்தாந்தஸ்தாபனார்த்தம் அன்னியஸித்தாந்த நிரோதஞ் செய்தலமை வுடைத்தாம். அப்படியே யொவ்வொரு ஸித்தாந்தகாத்தரும ஸ்மவஸ்தாபனமும, பரமதநிரஸ்தமுஞ் செய்து வருதலும் சங்கதமேயாம். இப்படி யொன்றை யொன்று நிரோதித்து விவகாரஞ்செயயும் பெற்றியுண்டாயினு மெல்லாஞ்சைவமேயாகி யொன்றி லொன்று சாதகசாத்யங்களாக முடியுமுண்மையால் அவ்வவ்வாசாரியர்கள் பிரவர்த்தக மத்தனையு முபகாரமேயாம். இதனால், ஸ்ரீகண்டாசாரியமூர்த்திகள் பூர்வீக சைவஸித்தாந்தத்தைக் கெடுத்தாரென்னுங் கேடுரையே கெட்டதென்க. மேல்வியஸ்தையை யுவமித்துரைக்குங்கால் சரியை கிரியை யோகஞானங்களென்னுஞ் சிவோபாசனபேதங்களி லவ்வவ்வாசார வநுட்டானங்களே பரமசிரேஷ்டத்வமுடையன வெனத் தனித்தனி வியந்துரைக்

கும் பெற்றியுண்டாயினமையே போதுமான நிதரிசனமாம். இவ்வுண்மையை ஞானமொன்றினையே பிராதான்யமாக நாட்டவெழுந்த ஒழிவிலொடுக்க மென்னும் ஸத்கிரந்தவாயிலாய்க் கண்டுணர்க. இன்ன சூக்குமவிசாரஞ்செய்யு மறிவில்லாத கொடுமையேயன்றோ செகுரு சிவலிங்கமுமென வறியாது நக்குநாயபோல மேலோர் விஷயத்திலெல்லாந் தலையிட்டுக்கொண்டு மோத்துண்டுபோக வருவது? சைவம் சிவசம்பந்தமென்றுமுண்மையா லச்சிவசம்பந்தம் வேதமார்க்கத்தாலும், சிவாகமமார்க்கத்தாலும், ஸ்மிருதி மார்க்கத்தாலும், புராணமார்க்கத்தாலுஞ் சித்திப்பதாக வேயப்படுகின்றது. இந்த மார்க்கானுசாரிகளாய்ப் பிரவர்த்திப்பவர் தனித்தனித் தாம்பற்றிநிற்கும் பிரமாணங்களில் சம்பந்திக்காமலே நிற்பவரும், தாம்பற்றிநிற்கும் பிரமாணத்தோடு இதரபிரமாணங்களையுந் தம்ம ஸ்வப்பிரமாணத்தி லவிரோதமாகத் தமக்குத் தோன்றுமளவி லங்கீகரித்தநுட்டிப்பவருமாகவே யிருக்குமுண்மையால், ஸ்ரீகண்டாசாரியர் பிரவர்த்தனமு மவ்வாறுள்ளனவாகவே முடியும். எல்லாம் சிவோபாசனமார்க்கங்களாகையா லெவ்வகைப்பட்ட வாசாரியர்களுந்தம் சிவபாரம்பரியத்தில வேறுபட்டதின்றாம். சிவாதித்யரத்னத்தைக் கலைந்து விஷ்ணுவாதித்யத்தை நிலைக்கப்பண்ண வந்த வத்தடிராயர் அதைவிட்டு வீண்விவகாரத்திலலைந்தழிவது அசங்கதம்! அசங்கதம்!!

இதுநிற்க, ஸ்ரீகண்டாசாரியர் சூத்திரர்க்கு மாத்ருயோனி ஜன்மமொழிய வேறுஜன்மங்கிடையாமையாலே ஒருவகைப்பட்ட சமஸ்காரங்களுக்கு முரியரல்லரெனவும், சூத்திரர்கள் பிரம்ஹவித்தைக்கு அதிகாரிகளல்லரெனவுங் கூறிச்சிவாகமஸித்தாந்தத்தைக் கெடுத்துவிட்டாரென்றுகண்ணீர்விடுத்தவக்கபோகிராயர் மல

த்தைமோசிப்பாம். ஸ்ரீபாஷ்யகாரர் மேற்சொன்னதெல்லாம் சூத்திரா வேதாதிகாரிகளன்றாகையா லவர்க்கு வேதோக்தமான ஸம்ஸ்காரஞ் செய்யக்கூடாமையாலே யவர்க்கு த்விஜத்வமுண்டாகாதெனவும், அதனால் அவர் வைதிககர்மங்களுக்கும, வேதாந்தமாயுள்ள பிரம்ஹவித்யாப்யாசத்துக்கும அதிகாரிகளல்லவென்றுங்கூறியது சர்வசம்பிரதிபன்னமேயாம். சிவாகமங்களிலவர்க்கு ஆசாரங்களும் வித்யாப்யாசங்கள் சிரேஷ்டத்வமுஞ்சொல்லியிருக்கிலேபோதும். சிவாகமத்தில்சூத்திரனுக்குவேதோக்தமாகவுபநயனாதிகர்மங்களைச்செய்யலாமென்றாவதுசூத்திரனவேதாத்யயனாதிகள்செய்யவதிகாரியென்றாவதுகூறியிருந்தது அந்தமட்டுக ஸ்ரீகண்டாசாரியா விரோதித்துக் கூறியிருப்பரென மாத்திரமே அவர் சிவாகம விருத்தமாகிய சைவத்துக்கு விரோதியென்பது சேரும் ஸ்ரீ கண்டாசாரியா கூறியபடியே சிவாகமத்திலுஞ் சூத்திரனுக்கு வேதோக்தமான கர்மங்கள் கூடாவென்று சொல்லுவதறியாமல ஸ்ரீகண்டமூர்த்திகளைத் தூஷிக்கவந்த வாசிரியாருண்ட அமுறைக் வாசகம் செருப்படியுண்டு போயிற்றென்க.

இனிச (சிவாதிக்யரத்நாவளி) முதற பாகத்தில "[illegible]" என்னுஞ் ஸூத்ரங்களை யெடுத்தாளுகையில இரண்டாவது ஸூத்ரத்திலுடைசாய் பிசகினது அச்சுப்பிழையெனவறியாது அதைக்கிரந்தகர்த்தாவினிடத்தி லாரோபித்துச சந்தோஷித்தவப்பாருசாத்திர பாவிசனை அல்பசந்தோஷியென்றே தீர்மானித்தனம். இந்தவசனங்களால் சங்கராசாரியர் வைஷ்ணவமதத்தைக் கண்டித்தாரென்று ஸ்ரீசுந்தரசிவாசாரியமூர்த்திகள் காட்டிய வுண்மையான் மனம் புழுங்கியே யன்றோ வவர்மேல் தோஷாரோபணஞ் செய்யவந்தது? சங்கராசாரியர் ஜீவர்களுக்குற்பத்திகூறுவ

தாகக் கொண்டு வைஷ்ணவமதத்தைக் கண்டிக்கவில்லை யெனவும், ஜீவர்களுக்குற்பத்தி கூறுவதாக மேலெழுந் தோன்றும் பாஞ்சராத்திர வாக்கியங்களையே மறுத்து, எதார்த்தத்தி லுற்பத்தியில்லையாதென்று அவரே ஸ்தாபனம் பண்ணிவிட்டாரெனவும் வீணே மனப்பால் குடித்து மகிழ்ந்தார். சங்கரபாஷ்யத்தில், "యో౽సౌ నారాయణః పరో౽వ్యక్తాత్ప్రసిద్ధః పరమాత్మా సర్వాత్మా స ఆత్మనాత్మానమనేకధా వ్యూహ్యావస్థిత ఇతి తన్న నిరాక్రియతే" என்கிற வாக்கியங்களைப் பார்த்து நாராயணசப்தத்தால நம்முடைய பாஞ்சராத்திரமதத்தைச் சங்கராசாரியர் ஸ்தாபனம் பண்ணிவிட்டாரென்றெண்ணி ஸ்ரீசங்கராசாரியரென்று ஸ்ரீசப்தத்தையுமவருக்குக் கொடுத்து சந்தோஷித்த வைஷ்ணவச்சிரேஷ்டர் மௌட்டியத்தை யென்னென்று சொல்வோம்? அவ்விடத்திலுள்ள வைருத்தியமுடைய வசனங்கள் முழுமையும் பார்வையிடாமல் குலைக்கிறவைகளுக்குச் சமானத்துக்கு அவா வாக்கியங்களாகிறபிண்டத்தைப் போடுகிறோம். "విప్రతిషేధాచ్చ" என்னு மவ்வதிகரண வுபஸம்ஹார சூத்திரபாஷ்யத்தில் சங்கராசாரியர் "వేదప్రతిషేధశ్చ భవతి చతుర్షు వేదేషు పరం శ్రేయః। అలబ్ధ్వా శాండిల్య ఇదం శాస్త్రమధిగతవానిత్యాది వేదనిందాదర్శనాత్। తస్మాదసంగతైషా కల్పనా" என்று சொல்லியிருப்பதில பாஞ்சராத்திரிக்கு வேதநிந்தகத்வம் பிராப்தமாவதறியாது தம்மதத்தையவர் சிலாகித்ததாக மகிழ்ந்துரையாநிற்பது பிராந்தியேயாம். பின்னுமவ்விடத்திலேதானே "న చ పాంచరాత్రసిద్ధాంతిభిర్వాసుదేవాదిష్వేకస్మిన్ సర్వేషు వా జ్ఞానైశ్వర్యాదితారతమ్యకృతః కశ్చిద్భేదో౽భ్యుపగమ్యతే" என்னும் வசனங்களால் பாஞ்சராத்திர சித்தாந்தமென் றறுதியிட்டே வெளிப்படையாகத் தூஷிக்கின்றாராக வவற்றையறியாமல் அவர் தமது ஸித்தாந்தத்தையே ஸ்தாபித்தாரெனக் கூறி மகிழ்வது என்னபேதமை? சங்கரபாஷ்யத்தில் நாராயணசப்தமாவது, மஹேசுவரசப்தமாவது, பரப்பிர

ரணமான பிரதானமென்று சொல்லப்பட்ட பிரகிருதி தத்வத்துக்குக்கலாதத்துவ மென்னும் பெயரையுடைய தத்துவாந்தரத்தினின்று முற்பத்திகூறியதும் அசங்கத மென்றனர். இப்படியுற்பத்திகள்கூறலா விச்சித்தாந்தம் "అజామేకాం లోహితశుక్లకృష్ణాం బహ్వీం ప్రజాం జనయంతీం సరూపాం, అజో హ్యేకో జుషమాణో౽నుశేతే జహాత్యేనాం భుక్తభోగామజో౽న్యః" என்னுஞ் சுருதிக்கு விருத்தமாமெனவும், இப்படியே மாயாதத்வத்தினின்றுஞ் சிவதத்வத்துக் குற்பத்தி கூறினமையால் அது "నిత్యోనిత్యానాం" என்னுஞ்சுருத்யாதிகளுக்கு விருத்தமாமெனவும், காலதத்துவத்துக்கு மாயாதத்வத்திலுற்பத்தி கூறினமையால் அது "అనాద్యనంతాః" என்றநேகத்யாதி சுருதிகளுக்கு விருத்தமாமெனவும் ஒருஞாமமவரை குலைத்தனர். மேலகாட்டிய (అజామేకాం) என்னும்சுருதி வசனப்படிப் பதிபசுபாசங்களென்னும் பதார்த்தத்திரயங்களும் அநாதிசித்தமாயுள்ளனவாக நிச்சயமாயிற்று. பதார்த்தயமென்றனேதிக்கமு மநாதியுமென்னுஞ் சுருதிவிரோதமாய் நாலாவதொரு பொருளுக்கு அநாதிநித்தியத்வங் கூறுதலசங்கதம். மேற்போந்த பதார்த்தங்கண் மூன்றுமஜனயபதார்த்தங்களும், ஒன்றிலொன்று விஜாதிகங்களுமாம். இவற்றுள் பதிசத்தாயுள்ளது. பாசமஅசத்தாயுள்ளது. பசுசத்தோடு சேர்ந்தவழிசசத்தாயும், அசத்தோடு சேர்ந்தவழிஅசத்தாயு முண்மையில் சத்துமாகாமல் அசத்துமாகாமல் சதசத்தாயுள்ளது. இனிப்பதியாகியசிவன் ஞானக்கிரியாஸ்வரூபனுய்ப் பசுவைஞானக் கிரியைகளாலும், பாசத்தைக்கேவலங்கிரியையாலு மியக்கப்பண்ணுவன். அப்படிபண்ணுங்கால் ஸ்வப்ரயோஜனங்கருதாது பரப்பிரயோஜனத்தையே திருவுள்ளமிசைந்தியற்றும் பரன் ஆணவகேவலத்திற் கிடந்தபசுக்களென்னுமெண்ணிறந்தவுயிர்களையு மவரவர்வினைக்கேற்ப மாயையைத் துணையாகச் சேர்த்து வெளிப்படுத்துவன்.

